# பரேல்விகளின் திரிபுகளும், திரித்தல்களும் தொடர்-1

நமது பெரியோர்களின் நூல்களில் சிறிய தவறுகளை கூட பெரும் தவறாக சித்தரிக்கும் பரேல்விகள்.

அவர்களின் நூல்களில் காணும் பெரும் தவறுகள் கண்ணிற்கு தெரிவதில்லை.நமது தவறுகள் அவர்களுக்கு மலையை போன்றும். அவர்களின் தவறுகள் கடுகை போன்றும் தெரிகிறது.

மார்க்க அறிஞரின் நூலிலும் பேச்சிலும் தவறுகள் ஏற்படுவது இயல்பான ஒன்றாகும்.எனினும் ஒரே நூலில் பல்வேறு திரித்தல் திரிபுகள் செய்வது பெரிய தவறாகும்.நூலில் வாசக அமைப்பை மாற்றுவதும் வார்த்தையை மாற்றுவதும் எதார்த்தமான ஒன்றாகும். தேவ்பந்த் பெரியோர்களின் நூல்களில் மாற்றப்படும் வாசகங்களில் இணைவைப்பு,இறைநிராகரிப்பு,

அவமரியாதை இதனால் தான் திரித்தல் செய்யப்படுகிறது என்பதாக சித்தரிக்கின்றனர்.இவ்வாறு இல்லையெனில் வாசகத்தை ஏன் மாற்றும் தேவை ஏற்பட்டது? என வினா தொடுக்கின்றனர்.

வாசகங்களை மாற்றுவதில் பரேல்விகளின் நிலைப்பாடு:

தேவ்பந்த் வஹ்ஹாபிகள் தங்களின் பெரியோர்களின் நூல்களில் உள்ள அவமரியாதையான வாக்கியங்களை திரிக்கின்றனர்.நீக்கிவிடுகின்றனர்.

இவர்கள் தங்களின் பெரியோர்களின் நூல்களிலிருந்து வாக்கியங்களை மாற்றுவதன் மூலம் உறுதியாக அவர்களிடத்திலும் அந்த வாக்கியங்கள் அவமரியாதையும் இறைநிராகரிப்புமாகும் என்பதைதான் இவர்களின் செயல்கள் நிரூபிக்கிறது.அந்த வாக்கியங்கள் இறைநிராகரிப்பு அவமரியாதை

இல்லையெனில் பிறகு அந்த வாக்கியங்களை நீக்கும் திரிபு செய்யும் தேவை ஏன் ஏற்பட்டது?

(اکابر دیوبند کا تکفیری کا افسانہ)

லாஹுூரில் ஸியானதுல் முஸ்லிமீன் மற்றும் இர்ஷாதுல் முஸ்லிமின் பெயரில் சங்கங்கள் உள்ளது.அந்த நிறுவனத்தினர் இந்த மோசடி செய்கின்றனர்.அவர்களது பெரியோர்களின் குஃப்ரான வாசகங்களில் மாற்றம் செய்ய ஆரம்பித்துவிட்டனர்.வருங்கால சந்ததியினர் பழைய நூல்களில் உள்ள குஃப்ரான வாசகங்கள் அறியக்கூடாது என்பதினாலாகும்.புதிய பதிப்புகள் இதனை தான் உறுதிப்படுத்துகிறது.எதார்தத்தை பொய்யாக்குவது,குஃப்ரை ஈமானாக காட்டுவது மற்றொரு பாவமாகும்.இவர்களின் செயல்களின் மூலம் இதனைதான் அறிய முடிகிறது.இன்றைய தேவ்பந்த் உலமாக்களிடத்திலும் இந்த குப்ரான வாசகங்கள் உறுதியாக குஃப்ராகும்.அவ்வாறு

இல்லையெனில் அவைகளை மாற்றும் தேவை ஏன் ஏற்பட்டது?

(سفحه و سطر )

ஆக வாசகங்களில் இறைநிராகரிப்பு, இணைவைப்பு,அவமரியாதை போன்ற காரணங்களினால் திரிபுகள் செய்யப்படுகிறது.நீக்கப்படுகிறது என்பதாக பரேல்விகளின் வாதிடுகின்றனர். ஆனால் இதில் வேடிக்கை என்னவெனில் பரேல்விகளின் தலைவர் ரிஜாகான் பரேல்விய மல்பூஜாதில் மட்டும் எத்தனை திரித்தல் திரிபுகள் அரங்கேறியுள்ளது என்பதை இனி காண்போம்!

பரேல்விகளின் தஃவதே இஸ்லாமியினரால் வெளியிடப்பட்ட ரிஜாகான் பரேல்வியின் மல்பூஜாத்தில் கடுமையான திரித்தல்களும் திரிபுகளும்:

பரேல்விகளின் தலைவர் நிறுவனர் ரிஜாகான் பரேல்வியின் மல்பூஜாத் பிரபல்யமாக அறியப்படும் ஒன்றாகும். அவர்களின் மகனார் பரேல்விய மு:ப்தி அ:ஜம் ஹிந்த் முஸ்த:பா ரிஜாகான் அவர்கள் ஒன்று சேர்த்தார்.கோர்வை செய்தார்.

மல்பூஜாத் மற்றும் அதனை தொகுத்தவர்கள் குறித்து பரேல்விகளின் நிலைப்பாடு:

மல்:பூஜாதே அ:லா ஹஜ்ரத்தின் அறிவிப்பாளரான தலைவர் முப்தி அ:ஜம் ஹிந்த் அவர்கள் நம்பகமானவர்,உலகப்பற்றற்றவர், இறையச்சம், மார்க்கப்பற்று ,இல்மின் கம்பீரம் விசாலாமான வாசிப்பு வலுவான நினைவாற்றலின் காரணமான ஏற்கத்தக்கது என்பதும் அவர்களின் மீது பெருமிதம் கொள்ளச்செய்கிறது.இதனால் தலைவர் மு:ப்தி அ:ஜம் ஹஜ்ரத் ஹிந்த் அவர்கள் கோர்வை செய்த மல்பூஜில் எந்த

வித சந்தேகமும் தடுமாற்றமும் இருக்க வாய்ப்பில்லை.

(மல்பூஜாதே அஃலா ஹள்ரத் பதிப்பகம் மக்தபதுல் மதீனா கராச்சி பக்கம்:46)

இதுதான் ரிஜாகான் பரேல்வியின் மல்பூஜாத்தை குறித்து சுருக்கமான அறிமுகம்.

இந்த மல்பூஜாத்தில் அஹ்மத் பரேல்வியின் புனையப்பட்ட, இறைநிராகரிப்பு,இணைவைப்பு, அவமரியாதை கொள்கைகள் தெளிவாக வெளிப்படுகிறது.இதனால் பரேல்விகள் திரிக்க ஆரம்பித்தனர்.அஃலா ஹஜ்ரதின் பொய்யான கொள்கைகள் நிலைப்பாடுகள் மறைக்கப்பட்டன. பரேல்விகளின் பிரபல்யமான நிறுவனம் தஃவதே இஸ்லாமியினரால் 'மஜ்லிஸூ மதீனதுல் இல்மிய்யா' ன் பேரில் மல்பூஜாதே அஃலா ஹள்ரத் ஆதாரங்களுடன் எளிமையாக வெளியிடப்பட்டது.

மல்பூஜாத் நூலின் பல பக்கங்களில் திரிபுகள் திரித்தல் நீக்குதல் அரங்கேறியுள்ளது.

(1) அஹ்மத் ரிஜாகான் பரேல்வி ஒரு நபரின் கனவை குறித்து கூறுகிறார்:

عرض کی یٰ رسول اللہ حضور کہاں تشریف لئے جاتے ہیں فرمایٰ برکات احمد
جنازہ کے نماز پڑھنے الحمد للہ یٰ جنازہ مبارک میں نے پڑھایٰ

அன்னார் கேட்டார் யாரசுலுல்லாஹ்! எங்கு சென்று கொண்டுள்ளீர்கள்? பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: பரகாத் அஹ்மதின் ஜனாஸா தொழுகைக்கு ( சென்று கொண்டுள்ளேன் ) என்றார்கள். அ◌ஃலா ஹஜ்ரத் ரிஜாகான் பரேல்வி கூறுகிறார்: அல்ஹம்துலில்லாஹ்! இந்த பரக்கத்துமிக்க ஜனாஸாவிற்கு நான் தொழவைத்தேன்.

(மல்பூஜாத் பரீத் புக்ஸ்டால் லாஹுர் பக்கம் 144)

திரித்தப்பட்ட மல்பூஜாத் :

الحمد لله ی جنازہ مبارک میں نے پڑھایا

அல்ஹம்துலில்லாஹ்! இந்த பரக்கத்துமிக்க ஜனாஸாவிற்கு நான் தொழவைத்தேன் என்ற வாசகமானது த॰॰வதே இஸ்லாமியினரால் வெளியிடப்பட்ட பதிப்பில் நீக்கி விட்டனர்.

(ஆதாரம் மல்॰॰பூஜாதே அ॰॰லா ஹஜ்ரத் மக்தபதுல் மதீனா கராச்சி பக்கம் 205)

முக்கிய குறிப்பு:

ரிஜாகான் பரேல்வி பெருமானார் ( ஸல்) அவர்களுக்கு இமாமத் செய்த நிகழ்வு என்கிற தலைப்பில் இது குறித்த விரிவான கட்டுரையை நமது தளத்தின் இந்த லிங்கில் பார்வையிடவும்.

ummathemuhammedhiya.blogspot.in/2016/09/blog-post.html?m=1

ummathemuhammedhiya.blogspot.in/2017/03/blog-post.html?m=1

(2) ரிஜாகான் பரேல்வி அவர்கள் நபி ( ஸல்) அவர்களின் காலத்தில் நிகழ்ந்த நிகழ்வை எழுதியுள்ளார் :

ایک بار عبد الرحمان قاری کہ کافر تھا اپنے ہمراہیوں کے ساتھ حضور اقدس صلی اللہ کے اونٹوں پر آپڑا چرانے والے کو قتل کیا اور اونٹ لے گیا اسے قراءت سے قاری نہ سمجھیں بلکہ بنو قارہ سے تھا

ஒரு தடவை அப்துர் ரஹ்மான் காரி என்ற காபிர் இருந்தான்.தனது தோழர்களுடன் நபி ஸல் அவர்களின் ஒட்டகங்களின் அருகே சென்றான்.மேய்ப்பாளரை கொன்று விட்டு ஒட்டகங்களை கொண்டு சென்று விட்டான். கிராஅத் என்பதால் காரி என்பதாக எண்ணிவிடாதீர் மாறாக பனூகாராவை

(கோத்திரத்தை) சேர்ந்தவன் ( மல்பூஜாத் பரீத் புக்ஸ்டால் லாஹூர் பக்கம் 164)

திரித்தப்பட்ட மல்பூஜாத்:

'அப்துர் ரஹ்மான் காரி' என்பதை அப்துர் ரஹ்மான் புஜாரி என்பதாக த஼஼வதே இஸ்லாமியினரால் வெளியிடப்பட்ட மல்பூஜாதில் மாற்றம் செய்தனர்.

மேலும்

قراءت سے قاری نہ سمجھ لیں

கிராஅத் என்பதினால் காரி என்பதாக எண்ணிவிட வேண்டாம் என்ற வாசகத்தையும் நீக்கிவிட்டனர்.(மல்பூஜாதே அ஼஼லா ஹஜ்ரத் மக்தபதுல் மதீனா பக்கம் 229)

முக்கிய குறிப்பு:

ரிஜாகான் பரேல்வி ஒரு ஸஹாபியை குறித்து காபிர் என்பதாக எழுதியுள்ளார் என்பதாக விரிவான கட்டுரையை நமது தளத்தில் பார்வையிடவும்.

ummathemuhammedhiya.blogspot.in/2016_09_01_archive.html?m=1

ummathemuhammedhiya.blogspot.in/2017/02/blog-post_27.html?m=1

(3) ரிஜாகான் பரேல்வி ஷைகை சிந்தித்தல் (تصور شیخ)
குறித்து விளக்கி எழுதியுள்ளார்:

அப்துல் அஜீஜ் தப்பாங் என்பவர் அவரின் சீடரான அஹ்மத் ஸல்ஜமாஸியின் இரு சம்பவங்களை குறித்து எழுதியுள்ளார் அதில் ஒரு நிகழ்வின் தனித்தன்மையை பாருங்கள்!

پیر مرشد ہر آن مرید کے ساتھ ہے حتیٰ کہ اس وقت بھی اپنے مرید کے ساتھ ہوتا ہے جب وہ اپنی بیوی سے ہمبستری کر رہاہو

பீர் பெரியோர் முர்ஷித் வழிகாட்டி ஒவ்வொரு நொடியும் முரீதுடன் தான் உள்ளார்.முரீதானவர் தனது மனைவியுடன் உடலுறவு கொள்ளும் போதும் அவருடன் ஷைகு உள்ளார்.

(நூல் மல்பூஜாத் 169 பரீத் புக்ஸ்டால் லாஹுர்)

திரித்தப்பட்ட மல்பூஜாத் த॰வதே இஸ்லாமியினரால் வெளியிடப்பட்ட மல்பூஜாதில் இந்த நிகழ்வையே மறைத்துவிட்டனர்.

(நூல் மல்பூஜாதே அ॰லா ஹஜ்ரத் 234)

ரிஜாகானின் பரேல்வியின் மல்பூஜாத்தில் திரித்தல் திரிபுகள் தொடர்- 2

(4) ரிஜாகான் பரேல்வி வாய்மையுள்ள, ஆய்வுமிக்க, ஷரீ அத்திற்கு எதிராகாத மஜ்தூபை குறித்து கூறுகிறார்:

அந்த மஜ்தூப் ( தன்னிலை மறந்தவர் ) வானத்தின் பக்கம் தலையை உயர்த்தி மழையை அனுப்பு! அல்லது என்னை உயர்த்திக் கொள்! என்று துஆ செய்தார்.

இதே போன்று அந்த மஜ்தூப் மற்றொரு சந்தர்ப்பத்தில் கூறினார் அல்லாஹ் அக்பர்! எனது கணவன் ( ஹய்யுன் லா யமூது) எப்பொழுதும் மரணிக்க மாட்டான் . எப்படி விதவையாக்குகிறீர்கள்?

(மல்பூஜாத் பரீத் புக்ஸ்டால் 169)

மல்பூஜாதில் திரித்தல் :

த஻வதே இஸ்லாமியர் வெளியிட்ட மல்பூஜாத்திலே இந்த சம்பவங்களை குறித்து எழுதியுள்ளனர்.எனினும் இரண்டு வாக்கியங்களையும் நீக்கவிட்டனர்.அதிலும்

குறிப்பான இறைநிராகரிப்பு வாக்கியத்தை நீக்கிவிட்டனர்.

(மல்பூஜாதே அஃலா ஹஜ்ரத் மக்தபதுல் மதீனா கராச்சி 278)

## ரிஜாகானின் மல்பூஜாத்தில் திரிபுகள் தொடர்-3

அஹ்மத் ரிஜாகானிடத்தில்

யா அல்லாஹ்! வஹ்ஹாபிகளுக்கு ஹிதாயத் தருவாயாக என்று துஆ கேட்பது கூடுமா? கூடாதா? என கேட்கப்பட்டது.

பரேல்விகளின் தலைவர் ரிஜாகான் தனது காழ்ப்புணர்ச்சியான சிந்தனையை வெளிப்படுத்துகிறார் வஹ்ஹாபிகளுக்கு துஆ செய்வது அதிகப்படியான ஒன்றாகும்.

( மல்பூஜாத் பரீத் புக் ஸ்டால் பக்கம் 296,297)

த ்வதே இஸ்லாமியினர் இதனை மறைத்து விட்டனர்.

( மல்பூஜாதே அ ்லா ஹஜ்ரத் மக்தபதுல் மதீனா 374)

குர்ஆனை மாற்றும் அஹமது ரிஜாகான் பரேலவி:

அஹ்மத் ரிஜாகான் ஒரு ஆயத்தை எழுதி அதற்கு தர்ஜுமா செய்துள்ளார்.

آمنت بالذي آمنت به بنو اسرائيل

பனூ இஸ்ராயீல் ஈமான் கொண்டதன் பேரில் ஈமான் கொள்கிறேன்.

( மல்பூஜாத் ்பரீத் புக்ஸ்டால் 286)

திரிக்கப்பட்ட குர்ஆன் வசனமானது குர்ஆனில் இல்லை.பரேல்வி அ ்லா ஹஜ்ரதின் சிந்தனையில் உதித்த குர்ஆன் வசனம். மேலும் பரேல்விய குர்ஆன் வசனத்தை எழுத்தாளரின் தவறு என்பதாக சொல்ல முடியாது.ஏனெனில் வசனத்தின் தர்ஜுமாவும் அதற்கு ஏற்ப

செய்யப்பட்டுள்ளது.இதனை மறைப்பதற்கு பரேல்விய ஆய்வாளர்கள் அமைதியாக குர்ஆனின் சரியான வசனத்தை எழுதி விட்டனர்.

( மல்பூஜாதே அ்ஃலா ஹஜ்ரத் மக்தபதுல் மதீனா கராச்சி 384)

அஹ்மத் ரிஜாகான் கூறுகிறார்:

கிராமத்தில் பதினெட்டு அல்லது இருபது வயது நிரம்பிய பெண்ணை நான் பார்த்தேன். அவளின் தாயார் வயோதிகராக இருந்தார்கள்.தாயாரின் பாலை ( குடிப்பதை) விடவில்லை.தாயார் பால் கொடுக்க மறுத்தாள்.அவள் வலுக்கட்டாயமாக படுக்கவைத்து மார்பில் ஏறி பால் குடிக்க ஆரம்பித்தாள்

( மல்பூஜாத் ஃபரீத் புக்ஸ்டால் 311)

தஃவதே இஸ்லாமியினர் பால் குடித்த நிகழ்வை ரிஜாகான் பரேல்வி பார்த்ததை

விரும்பவில்லை.இதனால் இந்த நிகழ்வை பாலை போன்று விழுங்கிவிட்டனர்.

( மல்பூஜாத் அ்ுலா ஹஜ்ரத் மக்தபதுல் மதீனா 405)

அஹ்மத் ரிஜாகான் பரேல்வி கழுதையின் கஷ்ுப்பை

(மறைவான விஷயத்தை) உறுதிப்படுத்தியவாறு ஒரு சம்பவத்தை கொண்டு வந்துள்ளார்.அதன் முடிவில் கூறுகிறார்.

وہ صفت جوغیر انسان کےلیے ہوسکتی ہے انسان کے لیے کمال نہیں اور جوغیر مسلم کے لیے ہوسکتی ہے مسلم کے لیے کمال نہیں

( மல்பூஜாத் அ்ுலா ஹஜ்ரத் பரீத் புக் ஸ்டால் 343,344)

த்ுவதே இஸ்லாமியினர் இதனை மறைத்துவிட்டனர்.

( மல்பூஜாத் அ்ுலா ஹஜ்ரத் மக்தபதுல் மதீனா 441)

## பரேல்விகளின் திரிபுகள் தொடர்-4

பரேல்விகள் என்று பெயரில் உள்ள பெரியோர்கள் மௌலவிமார்கள் பெரும் மோசடிக்காரர்கள் நீதமற்றவர்கள் இவர்களின் மோசடிகளை பரேல்விகளும் ஏற்றுக்கொள்கிறார்கள்.

பிரபல்யமான பரேல்விய மௌலானா நுஃமான் ஷேராஜி காதிரி அவர்கள், தற்கால பிரபல்யமான பரேல்வி அறிஞர் குலாம் ரஸூல் ஸயீதின் யூத வழிமுறையை ஏற்றுக்கொள்கிறார்.

எனக்கு ஸயீத் ஸாஹிபின் ஆதாரங்கள் மற்றும் அரபிவாக்கியங்களின் மொழிபெயர்ப்புகள் மீது அடிப்படையில் எப்போதும் நம்பிக்கை இல்லை.அவர் வாசகங்களை திரித்தல் புரட்டலில் கைதேர்ந்தவர்.அசல் வாசகத்தின் கருத்தை முழுமையான விழிப்புணர்வுடன் தனது நோக்கத்திற்கு ஏற்ப மாற்றி மொழிபெயர்க்கும் வழக்கமுள்ளவர்.சில இடங்களில் பெரும் மோசடியுடன் நடந்துள்ளார்கள்.

( தஃவதே ஹக் 18,19)

ஒரு இடத்தில் மௌலவி குலாம் ரஸூல் ஸயீதின் மோசடிகளை கூறியவாறு தாருல் இஃப்தாவின் முஃப்தியான துராபுல் ஹக் காதிரி அவர்கள் இவ்வாறு குமுறுகிறார்கள்:

மௌலானா ஸயீத் அவர்கள் அல்லாமா ஸய்யித் முஹம்மது ஆலூஸி பக்தாதியின் தப்ஸீர் ரூஹுல் மஆனியில் அஹ்காப் சூரா ஆயத்து ஒன்பதின் விளக்கத்தில் வாக்கியங்களை துண்டித்து மொழிபெயர்ப்பு செய்துள்ளார்.ஏறத்தாழ இரண்டு பக்கம் உள்ளது.இந்த செயலானது முற்றிலும் (பக்கங்களை) நிரப்புவதாக உள்ளது என்பதை அறியமுடிகிறது.பக்கம் 41ல் இறுதி வரிக்கு முன்பு அசலான அரபி வாசக அமைப்பையும் அதன் மொழிபெயர்ப்பையும் ஸயீத் ஸாஹிப் அவர்கள் செய்துவிட்டார்.

(தஃவதே ஹக் பக்கம் 47)

இதே போன்று பரேல்விய ஹகீமுல் உம்மத்தின் மகனார் பிரதிநிதி இக்திதார் கான் நயீமி அவர்கள் பரேல்விய பாகிஸ்தான்

பேச்சாளர் ஷ ஃபீ ஃ அவர்களின் மோசடியை நீதமற்ற தன்மையை முறையிட்டவாறு எழுதியுள்ளார்.

بعض حوالوں میں توڑ موڑ کر کے خیانت کی گئی

சில ஆதாரங்களை துண்டித்து மாற்றி மோசடி செய்துள்ளார்.

(ஹுர்மதே ஹிளாப் ஸியாஹ் பக்கம் 23)

அஃலா ஹஜ்ரதின் வாசக தொடருக்கு தவறான விளக்கம் கொடுத்து பொய்யுரைத்துள்ளார்.

(ஹுர்மதே ஸியாஹ் ஹிளாப் பக்கம் 37)

இதே போன்று டாக்டர் மஹ்மூத் அஹ்மத் ஸாஹிப் புஸ்ரான் காஜிமி மோசடிகளை குறித்து குமறியுள்ளார். அவர் தனது தந்தையின் தப்ஸீரில் முரண்பாடுள்ள வாசக அமைப்பில் திரிபு செய்துள்ளார்.புஸ்ரான் காஜிமி மடையர் இல்லை.மாறாக நேர்மையற்றவர்

((முஆஹதுத்திப்யான் பக்கம்:52)

நன்றாக சிந்தியுங்கள்!

ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிமின் விரிவுரையாளர்,பாகிஸ்தான் பேச்சாளர் தற்கால கஜ்ஜாலி என்பதாக பிரபல்யமாக சொல்லப்படுவர்களின் மார்க்க ரீதியான காரியத்தில் செயல்படும் வழிமுறை எனில் பொதுவான பரேல்விகளின் வழிமுறை எப்படி இருக்கும்? இதனை நிர்ணயிப்பது சிரமமானது இல்லை. இன்ஷா அல்லாஹ் தொடரும்

முக்கிய குறிப்பு : பரேல்விகளின் திரிபுகள் குறித்த தொடரில் ஹள்ரத் மௌலானா மௌலவி விவாதகர் ஸாஜித்கான் தாமத் பரகாதுஹும் அவர்களின் ஆய்வை முன்வைத்து எழுதப்படுகிறது.பரேல்விகளின் நூல்கள் இணையத்தில் நீண்ட தேடலுக்கு பின்பும் கிடைக்கவில்லை.இன்ஷா அல்லாஹ் நூல்கள் கிடைத்தால் அதனின் Photo copy பதிவேற்றப்படும் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்!

## பரலேவிகளின் திரிபுகள் தொடர்-5

ஹஜ்ரத் அக்தஸ் பீர் மெஹ்ரே அலி அவர்களின் மக்தூபாதில் கடிதங்கள் வருகிற நிகழ்வு (கருத்து)

நபி ( ஸல்) அவர்கள் முஹ்தாரே குல் (அனைத்து விஷயங்களிலும் சுய அதிகாரம் பெற்றவர்) என்ற கொள்கையை தவறு என்கிறார்கள்.அதற்குரிய ஆதாரமாக கூறுகிறார்கள்

பெருமானார் (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அபூதாலிப் அவர்கள் ஈமானில் வரவேண்டும் என ஆசைப்பட்டார்கள்.எனினும் நிறைவேறவில்லை.எனவே நபி ( ஸல்) அவர்களுக்கு இந்த அதிகாரம் இல்லையெனும் போது நல்லோர்களுக்கு இந்த அதிகாரம் எப்படி கிடைக்கும்?

அல்லாஹ் அனைத்துவித அதிகாரங்களையும் நபி ஸல் அவர்களுக்கு நல்லோர்களுக்கும் கொடுத்துவிட்டு சும்மா உட்கார்ந்து கொண்டானா?

( மக்தூபாதே தய்யிபாதே ம ஃரூபா பிமெஹ்ரே சிஷ்திய்யா பக்கம்:127)

ஹஜ்ரத் பீர் மெஹ்ர் அலி ஷாஹ் ஸாஹிப் அவர்கள் மக்தூபாதில் கூறுவதானது பரேல்விய

நூதன கொள்கையான முஹ்தாரே குல் (அனைத்து சுயவிருப்பம்

பெருமானார் ( ஸல்) அவர்களுக்கு உண்டு) என்பதற்கு முற்றிலும் எதிராக

உள்ளது.இதனால் 1996 லே வெளியிட்ட பதிப்பில் பெரியோரின் தவறு என்பதை ஏற்றவாறு

முழுமையாக நீக்கிவிட்டனர்.

மௌலவி ஹஸனைன் ரிஜா அவர்கள் அ ஃலா ஹஜ்ரதின் ' வஸாயா ஷரீப்'

எழுதினார்.அதில்

வருகிற நிகழ்வு :

மௌலவி அஹ்மத் ரிஜாகான் அவர்களின் பற்றற்ற வாழ்வு இறையச்சம்

அறியப்பட்டு இருந்தது.நான் சில பெரியோர்கள் கூறுவதை கேட்டேன்: "அன்னாரை

பார்ப்பதால் ஸஹாபாக்களின் ஜியாரத்தின் ஆர்வம் குறைந்துவிட்டது"

.( வஸாயா ஷரீ ்ஃப்

பக்கம்:24 பழைய பதிப்பு)

இதனின் புதிய பதிப்பானது வெளியிடப்பட்ட பொழுது அதனை

நீக்கிவிட்டனர்.எழுத்தாளரின் தவறு என்பதாக பிதற்றியுள்ளனர்.தேவ்பந்த்

பெரியோர்களின் நூலில் எழுத்தாளரின் தவறை கூட இணைவைப்பாக அவமரியாதையாக

சித்தரிப்பார்கள்.ஆனால் பரேல்விய பெரியோர்களின் தவறுகளில் மட்டும்

எழுத்தாளரின் தவறு என்பதாக சமாதானம் கூறிக்கொள்கின்றனர்.

புதிய பதிப்பில் :

மௌலவி அஹ்மத் ரிஜாகான் அவர்களின் பற்றற்ற வாழ்வு இறையச்சம்

அறியப்பட்டு இருந்தது.நான் சில பெரியோர்கள் கூறுவதை கேட்டேன் அன்னாரை

பார்ப்பதால் ஸஹாபாக்களின் ஜியாரத்தின் ஆர்வம் அதிகமானது. (வஸாயா ஷரீ ்ப்

பக்கம்:45,46)

இதன் பிறகு 1996 ம் வருடம் யாஸீன் அஹ்தர் மிஸ்பாஹி அதில் திரிபுகள் மற்றும்

புரட்டல் செய்து கருத்தை மாற்றினார்.

அதில் வரும் வாசகம்:

நான் சில பெரியோர்கள் கூறுவதை கேட்டேன்.அ ்லா ஹஜ்ரத் அவர்கள் அண்ணல் நபி ஸல்

அவர்களை பின்பற்றுவதை பார்த்து ஸஹாபாக்களின் ஜியாரதின் திருப்தி

ஏற்பட்டது.அதாவது அ ்லா ஹஜ்ரத் கிப்லா அவர்கள் ஸஹாபாக்களின் இறையச்சம் மற்றும்

பற்றற்ற வாழ்விற்கு பூரணமான முன்மாதிரியாக பூரணத்தை வெளிப்படுத்துபவராக

இருந்தார்கள் .

( வஸாயா ஷரீ ஃப் பர் இ ஃதிராஜாதே மவ்ஜவாபாத் பக்கம்:60 யாஸீன்

அஹ்தர் மிஸ்பாஹி)

கவனியுங்கள்! ஒரு பொய்யை மறைக்க எத்தனை பொய்களை பரேல்விகள் புனைகிறார்கள்!

எந்தளவிற்கு கருத்துக்கள் திரிக்கப்படுகிறது.

ஹஜ்ரத் ஷேர் முஹம்மத் ஷர்கபூரி அவர்களின் வாழ்வில் நடந்த நிகழ்வுகளில் ஒன்றை

அவர்களின் குறிப்பிடத்தக்க சேவகர் ஜனாப் சூ ஃபி முஹம்மத் இப்ராஹிம்

எழுதியுள்ளார்கள்:(சுருக்கம்)

மௌலானா மௌலவி அன்வர் அலி ஷாஹ் ஸாஹிப் அவர்கள்

தனது தோழர் மௌலவி அஹ்மத் அலி ஸாஹிப் முஹாஜிர் லாஹூர் அவர்களை சந்திக்க

ஷர்கபூருக்கு வந்திருந்தார்.ஹள்ரத் மியா ஸாஹிப் அவர்களை மிகவும்

விருப்பத்துடன் சந்தித்தார்கள்.அன்னார் அவர்களிடம் பேசினார்கள்.ஷாஹ் ஸாஹிப்

அவர்கள் அமைதியாக இருந்தார்கள்.பிறகு அன்னார் ஷாஹ் ஸாஹிப் அவர்களை சங்கையுடன்

வழியனுப்பி வைத்தார்கள்.விடைபெறும் போது ஷாஹ் ஸாஹிப் அவர்கள் அன்னாரிடம்

கூறினார்கள்

தாங்கள் என் முதுகின் மீது தங்கள் கரத்தால் தடவுங்கள்! அன்னார் அவ்வாறே

செய்தார்கள்.

அதன் பிறகு அன்னார் கூறினார்கள்: ஷாஹ் ஸாஹிப் அவர்கள் பெரும் ஆலிமாக இருந்தும்

என்னைப் போன்ற சாதாரண நபரிடத்தில் முதுகை தடவும் படி கூறியுள்ளார்கள்.மேலும்

ஹஜ்ரத் மியா ஸாஹிப் கூறினார்கள் தேவ்பந்தில் நான்கு நூர் உள்ளது. அவர்களில் ஒருவர் ஷாஹ் ஸாஹிப் அவர்கள் ( கஜீனா ம ஃரிபத் தலைப்பு:13 பக்கம்:86 மக்தபா ஸீல்தான் ஆலம்கீரி உர்து பாஜார் லாஹூர்)

புதிய பதிப்பில் இதனை முற்றிலும் நீக்கிவிட்டனர்.

சில பதிப்பாளர்களின் தவறுகளை கூட தேவ்பந்த் பெரியோர்களின் மோசடி என்பதாக விமர்சிப்பவர்களான பரேல்விகளுக்கு இந்த திரிபானது கண்களுக்கு தென்படவில்லையா?

## பரேல்விகளின் திரிபுகள் தொடர்-6 (முஸ்லீம் லீக் பற்றி பரேலவிகளின் நிலைபாடு)

மௌலவி அஹ்மத் ரிஜாகானின்

மல்பூஜாத்தில் 221பக்கம் பாகம் 2 ல் வருகிறது சாப்பிடும் போது பிஸ்மில்லாஹ் மறந்துவிட்டால் ஓதும் துஆவானது

بسم اللہ علی اولہ و آخرہ

என்று தவறாக உள்ளது.

மல்பூஜாதின் அனைத்து பதிப்புகளிலும் தவறான துஆ உள்ளது.புதிய பதிப்பில் அஃலா ஹஜ்ரத்தின் தவற்றை மறைக்க சரியான துஆ எழுதி சரி செய்துவிட்டனர்.

(மல்பூஜாத் பாகம்:2 பக்கம்:294)

அஹ்மத் ரிஜாகான் கலீபா மௌலவி அபுல்ஹஸனாத் காதிரியின் நூலில் "அவ்ராகே ஙம்மில்" ஆதம் ( அலை) அவர்கள் குறித்து அவமரியாதை ஏற்படுத்தும் விதமாக எழுதியுள்ளார்

ஆதம் அலை ஆட்சி அதிகாரத்தின் பேரில் சுவனத்தில் இருந்தார்கள்.

ஆதம் ( அலை) கிரீடம் அணியப்பட்டு கண்ணியமாக இருந்தார்.இன்று இழிவில் அகப்பட்டுக்கொண்டார்.( அவ்ராகே ஙம் பக்கம்:2 (முதல் பதிப்பு 1348)

புதிய பதிப்பில் வாசகத்தை பின்வருமாறு திரிபு செய்து மாற்றிவிட்டனர்.

ஆதம் அலை ஆட்சி அதிகாரத்தின் பேரில் சுவனத்தில் இருந்தார்கள்.ஆதம் (அலை) கிரீடம் அணியப்பட்டு கண்ணியமாக இருந்தார்.இன்று சோதனைகளில் அகப்பட்டுக்கொண்டார்.அவ்ராகே கம்)

அஹ்மத் ரிஜாகானின் தர்ஜுமாவில் அஹ்மத் யார் குஜராத்தி ஓரக்குறிப்பாக விளக்கவுரையில் எழுதியுள்ளார்:

ஷைத்தானின் சிறப்பம்சத்தை வெளிப்படுத்துகிறார் ஏனெனில் நான் பழைய இறைஞானி மார்க்க அறிஞர் வணக்கசாலி மேலான தேவ்பந்தியாக இருக்கிறேன்.மேலும்

இதுவரை ஆதம் அலை அவர்கள் எதையும் கற்கவில்லை.வணக்கம் புரியவில்லை.( தப்ஸீர் நூருல் இர்பான் பக்கம் 730 பாகம் 23)

அஹ்மத் யார் குஜராத்தி இங்கு ஷைத்தானை மேலான தேவ்பந்த் என்பதாக கூறி தனது காழ்ப்புணர்ச்சியை இனவெறியை வெளிப்படுத்தியுள்ளார். எனினும் நயீமி பதிப்பகத்தினரால் வெளியிடப்பட்ட நூருல் இர்பானில் தேவ்பந்த் என்பதை நீக்கிவிட்டனர்.

( நூருல் இர்பான் பக்கம் 550 நயீமி குதுப்கானா)

யார் அஹ்மத் குஜராத்தியின் இந்த பொய்யால் வெட்கப்பட்டு பின்னால் வந்த பரேல்விகள் அதனை நீக்கிவிட்டனர்.

நூருல் இர்பானில் ஓர் இடத்தில் அஹ்மத் யார் அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்களின் மீது அவமரியாதை நடந்துள்ளார் .

நபி ( ஸல்) அவர்கள் சிலைகளின் பெயரில் அறுத்த மாமிசத்தை நுபுவ்வத்திற்கு முன்பாக சாப்பிட்டுள்ளார்கள்.

( நூருல் இர்பான் பாகம் 15 ஸூரா கஹ்ப் ஹாஷியா பக்கம் 799)

இதனால் 'பீர் பாய்' பதிப்பகத்தினரின் செயலைப் பாருங்கள்!

நபி ஸல் அவர்கள் சிலைகளின் பெயரில் அறுத்த மாமிசத்தை நுபுவ்வத்திற்கு முன்பாக சாப்பிட வில்லை.

( நூருல் இர்பான் பக்கம்:471,பீர் பாயி கம்பெனி லாஹூர்)

கவனமாக பாருங்கள்!

அசலான வாக்கியத்தில் னா (இல்லை) என்பது இல்லை.எனினும் பரேல்விகள் அவமரியாதையை மறைப்பதற்காக ـن வை இடையில் சொருகி திரித்துள்ளார்கள். கைசேதம் அல்லாஹ்வின் அச்சத்தை குறித்து கவலைப்படாமல் மார்க்கரீதியாக மோசடி செய்துள்ளனர்.எனினும் திருட்டானது பிடிக்கப்பட்டுவிட்டது.

1942 லே பரேல்விகள் அஹ்மத் ரிஜாகான் ஒரு பத்வா அத்தலாயிலுல் காஹிரா என்ற பெயரில் பம்பாயில் வெளியிட்டனர். அதில் ஆல் இன்டியா முஹம்மடன் எஜுகேஷன் கான்ஃபிரன்ஸ் மற்றும் முஸ்லீம் லீக் குறித்து கேட்கப்பட்டது.

( பக்கம்:3 )

அவர்களுக்கு உதவி செய்வது.அதனுடன் ஒன்றிணைவது.இந்த பத்வாவின் பேரில் அஹ்மத் ரிஜாகான் உடன் எண்பது பரேல்விய உலமாக்கள் கையொப்பமிட்டுள்ளனர்.அதில் முஸ்லிம் லீக் பானி மற்றும் அவரின் ஜமாஅத்தின் மீது குஃப்ர் பத்வா அளித்துள்ளனர். அவர்களுக்கு உதவி செய்வது உபகாரம் செய்வது ஹராம் என்பதாக தீர்ப்பு அளிக்கப்பட்டுள்ளது.எனினும் ரிஜா பவுண்டேஷன் செயலை பாருங்கள் ஒட்டுமொத்தமாக முப்பது பாகங்களாக வெளியிட்டனர்.15ம் பாகத்திலே ஆல் இண்டியா முஹம்மது டன் பெயரை குறிப்பிட்டு

நேர்மையை நிரூபித்துள்ளனர்.எனினும் முஸ்லிம் லீகின் பெயரை நீக்கிவிட்டனர். பாருங்கள் பக்கம் 103,104 பாகம்:15

முக்கிய குறிப்பு:

பரேல்விகள் இந்தியா பிரிவதற்கு முன்பாக முஸ்லிம்லீக் மாற்றமாக

زریں بخیہ دری الجوابات السنیة احکام نوریہ شرعیہ تجانب اہلسنت

பெயரில் பத்வா வெளியிட்டனர்.அதில்

முஹம்மத் அலி ஜின்னாஹ் நரகநாய் ரா◌ஃபிஜி கா◌ஃபிர் முர்தத் என சொல்லப்பட்டுள்ளது .முஸ்லீம் லீகிற்கு உதவி உபகாரம் ஹராம் என கூறப்பட்டுள்ளது.

இன்றைய பரேல்விகள் அவர்களின் பெரியோர்களின் தீர்ப்புகளை ஏன் சாமானியர்களுக்கு முன்பாக கூறுவதில்லை?